# 47

## காசி யாத்திரை

நெட்டை ரெங்கன் ஆயிரத்தில் ஒருவன் என்றால் பொருந்தும். அவன் உருவம் ஒருபுற மிருக்கட்டும் – உயர்ந்த மூங்கில் கம்பு போன்ற தேகத்தின் மேல் தென்னங் குறும்பை போன்ற தலை – அதில் உச்சிக் குடுமி. அவன் பேச்சும், மாதிரியுமே தனி!

'வாழயிலே கொல்லையிலே நடந்து வந்தான் நெட்டை ரெங்கன்'

என்று அவன் சிரித்துக் கொண்டு பாடும்பொழுது கேட்பதைக் காட்டிலும் பரமானந்தம் வேறில்லை. தட்டுச் சுற்று வேஷ்டியின் மேல் துண்டை சதா இடுப்பில் கட்டியிருப்பான், சுவாமி தரிசனம் செய்யப் போகிறவன் போல. தெருவில் போகும்போது கையைத் தட்டிக் கொண்டும், தலையை ஆட்டிக்கொண்டும் தான் போவான். அடியெடுத்து வைத்தானானால் அவனுடன் யாரும் நடக்க முடியாது. எட்டு மணிக்கு எங்களூரை விட்டுப் புறப்பட்டானானால், பத்து மணிக்குப் பனையபுரம் போய்விடுவான்–பதினைந்து மைல்!

'நெட்டை ரெங்கா, பஜனை மடத்தில் வைத்தியர் இருப்பார், கூட்டிக்கொண்டு வாயேன்' என்று நீங்கள் சொல்லி முடிப்பதற்குள் பஜனை மடம் போய்ச்சேர்ந்து விடுவான். வைத்தியர் எதிரே வந்தாலும் நிற்கமாட்டான்!

பிச்சு சாஸ்திரி பரம வைதிகம் – பரம தரித்திரம். ஆனால் அதிகாலை ஸ்தானமும் அந்த வேளை பஜனையும் தவறமாட்டார். கரடு தட்டிப் போன குட்டைப் பேர்வழி. கரகரவென்று தொண்டை 'பிரளயப யோதி ஜயே' என்று அவர் அஷ்டபதியைப் பாடினால் போதும் – ஈசுவரன். 'உனக்கென்ன வேண்டும்; பக்தா, உடனே சொல்!' என்று வந்து விடுவார். ஏகாங்கி! பாவம், ஆற்றங்கரையிலும் பஜனை மடத்திலும் அவரைப் பார்க்கணும் மாறி மாறி.

அப்பு பதினைந்து வயது பயலானாலும் படிப்பு என்ற வாசனையே அற்றவன். ஒரு கால் லேசாக நொண்டி. வாயால் சதா ஏதாவது

*பாரததேவி, 03.09.1939*

துரும்பையோ கல்லையோ போட்டுக் கொண்டேதான் இருப்பான். கண்ட விடமெல்லாம் கூரையைப் பிய்ப்பதுதான் வேலை அவனுக்கு. பேசும் வார்த்தைகளையெல்லாம் இரண்டுதரம் சொல்லுவான் – முதல் தரம் மத்திய ஸ்தாயியிலும் பிறகு மந்திர ஸ்தாயியிலுமாக, ஒருவனை வைதானானால் 'அயோகியப் பயலே'! என்று உறக்கச் சொல்லிவிட்டு உடனே மெல்ல 'அயோகியப் பயலே' என்று சொல்லிக்கொள்வான்.

இந்த மூன்று பேரும் காசி யாத்திரை போவதென்று தீர்மானித்து தஞ்சாவூர் ஸ்டேஷனில் டிக்கட்டு வாங்க வந்துவிட்டார்கள் என்றால், அது ஆச்சரியம் தானே?

நெட்டை ரெங்கன் கையில் கொஞ்சம் காசுண்டு. முப்பது வயது ஆகியும் கலியாணம் ஆகவில்லை. எதனாலோ? கலியாணத்தில் தான் காசி யாத்திரை செய்து விடுவது என்று தீர்மானித்து விட்டான் போலிருக்கிறது.

'பிச்சு மாமா காசிக்கு வரேளா?' என்று கேட்டு வைத்தான் ஆற்றங் கரையிலே.

'தயார்' என்று அப்பொழுதே ஜால்ராவையும் சொம்பையும் கையில் எடுத்துக்கொண்டார் அவர்.

'மாமா நானும் வரட்டுமா?' என்றான். அப்பு அதையே திருப்பிச் சொல்லிக்கொண்டு பார்த்தான் நெட்டை ரெங்கன். கையாள் ஒருவன் இருக்கட்டுமென்று 'சரி' யென்றான்.

ராத்திரியே பயணம். நெட்டை ரெங்கன் சில்லறையெடுத்து அப்புவிடம் கொடுத்து 'டேய், அப்பு, ஆபத்துக்குக் கையில் இருக்க வேண்டும். கால் ரூபாய்க்கு ரவை வாங்கிக்கொண்டு வா!' என்றான்.

'இதோ!' என்று ஓடினான் அப்பு. ஐந்து நிமிஷத்திற்கெல்லாம் துண்டு நிறைய வாங்கிக் கொண்டு வந்து கூட்டத்தில் கொட்டினான்.

'என்னடா இது!'

'ரவை!'

'கோலி குண்டு எதற்கடா? என்று நெட்டை ரெங்கன் அப்புவைப் பளாரென்று கன்னத்தில் விட்டான்.

'நீங்கள் தானே சொன்னேள்?'

'கோதுமை ரவைன்னா சொன்னேன்!'

## 2

ஸ்டேஷனில் ஏகக்கூட்டம். நெட்டை ரெங்கன் டிக்கட் கொடுக்கும் ஜன்னலண்டை அரைமணி நேரம் நின்று பார்த்தான் கூட்டம் குறைகிற வழியாக இல்லை. சட்டென்று கொஞ்சம் முண்டிக்கொண்டு முன்னே

போய், தன் தலையை டிக்கட் கொடுக்கும் சந்திற்குள் நுழைத்து விட்டான். தலைதான் சின்னதென்றேனே!

'ஓய் யாருங்காணும் நீ! எடு தலையை வெளியே!' என்று டிக்கட் கொடுப்பவன் ரூல் கம்பை எடுத்துத் தலையில் போட்டான். நெட்டை ரங்கன் அசையவில்லை. டிக்கட்டை வாங்கிக் கொண்டுதான் தலையை வெளியே எடுத்தான். இந்த சம்பவத்திற்குப் பிறகுதான் எஸ்.ஐ.ஆர். ஜன்னல் சந்துகளை சிறிதாக்கிவிட்டார்கள்.

வண்டியில் கூட்டம் தாங்க முடியவில்லை எப்படியோ அவர்கள் ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். மூட்டை வைக்கும் பலவை பிச்சு சாஸ்திரிக்கு எட்டவில்லை. மடி சஞ்சியை ரங்கன் வாங்கி அதில் வைத்தான்.

'மாமா, என்ன மடிசஞ்சி கனக்கிறது?'

'ரங்கா, சும்மா இரு!'

அப்புவுக்கு ரயிலில் கூரைபிடுங்க இடமில்லை. ஆகையால் வண்டியோரங்களையெல்லாம் கிள்ளிக் கிள்ளிப் பார்த்துக்கொண்டே இருந்தான்.

பிச்சு சாஸ்திரி கண் மூடித் தூங்கி, பக்கத்திலிருந்த ரங்கன் மேல் முட்டிக் கொண்டார். ரங்கன்

'வண்டியிலே புகை வண்டியிலே
ஏறிக்கிட்டான் நெட்டை ரங்கன்'

என்று பாட்டை மாற்றி முணுமுணுத்துக் கொண்டிருந்தான்.

மேலே பலகையில் வைத்திருந்த மடிசஞ்சி மூட்டை ரயில் ஆட்டத்தில் மெல்ல மெல்ல நகர்ந்து கீழே உட்கார்ந்திருந்த ஒருவர் மண்டையில் விழுந்த பொழுது நக்கென்று சத்தம் கேட்டது.

ஐயோ! தலை போச்சு! என்று ஒருவர் அலறின பொழுது 'அப்பப்பா, கால்விரல் போச்சு!' என்று எதிரிலிருந்து கத்தினார்.

'யார் மூட்டை ஐயா இது?' என்று ஆத்திரத்துடன் பல குரல்கள் கேட்டன.

பிச்சு சாஸ்திரி விழித்துக்கொண்டு விஷயத்தைக் கண்டு கல்லுப் பிள்ளையார் போல கம்மென்று இருந்துவிட்டார். வாயைத் திறந்தால் மண்டை யுடைந்துபோய் விடுமென்று மூவரும் மூடிக்கொண்டார்கள்.

இப்படி அனாதைப் பொருளாகப் போன மடி சஞ்சியை ஒருவர் அவிழ்த்துக் கொட்டினார். ஜால்ரா ஜோடி, சின்ன சொம்பு, பலவைப் பாறைக்கல் ஒன்று, எல்லாம் கீழே விழுந்தன. சாஸ்திரி வேஷ்டி துவைக்கும் கல்!

மடிசஞ்சி சாமான் அதோகதிதான் என்று பிச்சு சாஸ்திரி தீர்மானம் செய்துகொண்டுவிட்டார். காசி யாத்திரை ஆரம்பம்!

●